# INTRODUCTION

BY

DR. P. SUBBARAYAN, M.A., B.C.L., BAR-AT-LAW, M.L.C.
Ex-Chief Minister to
The Government of Madras.

I am very pleased to write an introduction to Rao Sahib N. C. Rangaswami Aiyangar's "Kindness to Animals." This is meant to be taught to younger children just as his first book "Jeeva Karunya Kathaigal" was meant for higher classes in the Elementary School and the Lower Secondary classes. It is very important that our children in schools should be brought up with kindness to animals instilled in them. I am glad he proposes to have the book translated into all the Indian languages. I feel that Mr. Rangaswami Aiyangar's work as Superintendent of the S.P.C.A. for the last twenty-two years is itself sufficient to prove the value of the teaching imparted by this little book. He has certainly brought to bear that experience in the writing of this book. I am sure this book will fill a long felt gap in text books, and I wish it every success.

"Fairlawns"
Egmore, Madras,
*11th September, 1933.*

P. SUBBARAYAN,
*Zamindar of Kumaramangalam.*

# முகவுரை.

இதில் உள்ள பாடங்கள் எல்லாம் பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட சிறுவர்களும் சிறுமிகளும் படித்துச் சுலபமாகத் தெரிந்து கொள்ளும்படி மிகவும் எளிய நடையில் எழுதப்பட்டு இருக்கின்றன.

குழந்தைகளுக்குப் படங்களின்மேல் விருப்பம் அதிகம். படங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் விஷயங்களை அவர்கள் என்றும் மறப்பதில்லை. அதனால், இந்தப் புத்தகத்தில் கூறியுள்ள விஷயங்கள் தகுதியான படங்களோடும் விளக்கப்பட்டுள்ளன.

பிராணிகள் நமது தயைக்கும், அன்புக்கும் உரியனவாயிருக்கின்றன என்றும், அவைகளை அன்பாக நடத்தவேண்டியது நமது கடமை என்றும், சிறுவர்களுக்கு மனத்தில் எளிதில் பதியக்கூடிய இளம்பிராயத்திலேயே, நன்றாய்க் கற்பிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

அன்பை உண்டாக்கும் இப்படிப்பட்ட பாடங்களைச் சிறுவயதிலேயே கற்பிப்பதனால், அவர்கள் பெரியவர்களாகும் போது மனிதரிடத்திலும், மிருகங்களிடத்திலும் சமமான அன்பு உள்ளவர்களாகவும், அதனால் நமது நாட்டுக்கே நன்மை செய்பவர்களாகவும் ஆவார்கள் என்று நான் நம்புகிறேன்.

என். ஸி. ரங்கசுவாமி ஐயங்கார்.




**'Your Heavenly Father Feedeth Them.'**

'அவைகளையும் உங்கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார்.'

# ஜீவகாருண்யம்

## சிறுவர் பதிப்பு

குழந்தைகளே !

நாம் எல்லோரும் சந்தோஷமாக இருக்க விரும்புகிறோம். அவ்விதமாகவே வாயில்லாப் பிராணிகளும் சந்தோஷமாக இருக்க விரும்புகின்றன. நாம் அவைகளுக்கு ஒருவிதமான தீங்கும் செய்யாமல், அன்பாக நடத்தினால்தான் அவைகள் சந்தோஷமாக இருக்க முடியும்.

நம்மைப் படைத்த கடவுளே அவைகளையும் படைத்து இருக்கிறார். ஆகையால், அவைகளைச் சரியாகப் பாதுகாத்தால்தான் நாம் கடவுளின் கருணையைப் பெறலாம்.

நம்மைப் போலவே அவைகளுக்கும் கண், மூக்கு, காது, வாய் முதலிய அவயவங்கள் இருக்கின்றன. அவைகளும், நம்மைப் போலவே உயிர் உள்ள வரையில் மூச்சு விடுகின்றன. சரியான ஆகாரம், தண்ணீர் முதலியவைகள் கிடைக்காவிட்டால் நமக்கு வியாதி உண்டாகிறது. அப்படியே

அவைகளுக்கும் தீனி இல்லாவிட்டால் வியாதி உண்டாகிறது.

நம்முடைய குழந்தைகளிடம் நமக்கு ஆசை இருக்கிறது. அவைகளுக்கும் தங்கள் குஞ்சுகளிடமும் குட்டிகளிடமும் ஆசை இருக்கிறது. நம்முடைய குழந்தைகளை நாம் காப்பாற்றுவது போலவே, அவைகளும் தங்கள் குஞ்சுகளையும் குட்டிகளையும் காப்பாற்றுகின்றன.

நம்மைப்போலவே அவைகளும் சுகதுக்கங்களை அடைகின்றன. நம்மை அடித்தால் நமக்கு நோகிறது. அவைகளைத் துன்பப்படுத்தினால் அவைகளும் கஷ்டப்படுகின்றன. அவைகளுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம் என்றால், நம்முடைய கஷ்டங்களை நாம் வாயினால் சொல்லுகிறோம்; சில சமயங்களில் அவைகளை நம்மால் நீக்கிக் கொள்ளவும் முடியும். பிராணிகள் தங்களுடைய கஷ்டங்களை வாய்விட்டுச் சொல்ல முடியாது. அவைகளால் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும் முடியாது.

நமது உறவினர், பெரியோர் முதலியவர்கள் நம்மை அன்பாக நடத்தினால் நமக்குச் சந்தோஷம் உண்டாகிறது. அவ்விதமாகவே, நமது பாதுகாப்பில் இருக்கும் பிராணிகளை நாம் அன்

பாக நடத்தினால், அவைகள் சந்தோஷப்படுவ தோடு நன்றியும் காட்டுகின்றன.

உலகில் உள்ள பலவகைப் பிராணிகளும் எவ்வளவு நேர்த்தியாகவும், அறிவு உள்ளனவாக வும் இருக்கின்றன! அவைகளிடம் இருந்து நாம் தெரிந்துகொள்ளும் நீதிகளும் அநேகம் இருக் கின்றன. புத்தி சாதுர்யம், தைரியம், பொறுமை, எஜமான விசுவாசம் முதலிய நல்ல குணங்களில் அவைகள் எவ்வளவோ மேன்மையாக விளங்கு கின்றன. தங்களுக்கு நேரிடும் கஷ்டங்களையும் பிராணபத்தையும் கூடக் கவனியாமல் குதிரை களும், நாய்களும், பூனைகளும் மற்றப் பறவை களும் தங்கள் எஜமானர்களை நெருப்பிலிருந்தும், நீரிலிருந்தும், பசியிலிருந்தும், யுத்த களங்களி லிருந்தும் காப்பாற்றி இருக்கும் சமயங்கள் ஆயி ரக் கணக்காகக் கூறலாம்.

நமக்குப் பல விதமாக உதவி செய்கின்ற பிரா ணிகளின் துன்பங்களைப் போக்கி, அவைகளுக்கு நன்மை செய்ய வேண்டுவது நமது கடமை அல் லவா? நம்முடன் வாழும் பிராணிகளில் சிலவற் றின் உபயோகங்களையும், அவைகளைப் பாதுகாக்க வேண்டிய முறைகளையும் இங்குக் கவனிப்போம்.

———



## 1. பசு

பசு ஒரு நல்ல மிருகம். அது சாந்த குணம் உடையது. அது நமக்கு இனிய பாலைத் தருகிறது. பாலிலிருந்து தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலியவைகள் கிடைக்கின்றன. இவைகள் நமது உணவிற்கு முக்கியமானவை. பசுவின் பால் தேக ஆரோக்கியத்தைத் தரும். பசு, அநேக தாயில்லாத குழந்தைகளையும், நோயாளிகளையும் தன் பாலினால் காப்பாற்றுகிறது.

நமது தேசம் பயிர்த்தொழில் நிறைந்தது. ஆகையால், பசுவை நன்றாகக் காப்பாற்றி அதன் சந்ததியை அதிகமாக்க வேண்டும். பசுவே ஒரு நாட்டின் செல்வத்திற்கு முக்கிய காரணமாகும்.

அது இறந்த பிறகும் பல வழிகளில் உப யோகப்படுகிறது. அதன் கொம்பிலிருந்து சிறு பெட்டிகள், கத்திப்பிடிகள், பொத்தான்கள்முதலிய வைகள் செய்யப்படுகின்றன. பைகள், பாதரட்சைகள் முதலியவைகள் செய்ய அதன் தோல் உப யோகப்படுகிறது.

இப்படிப்பட்ட உபயோகமுள்ள மிருகத்தை நாம் அன்பாக நடத்த வேண்டாமா? அதை, காற் றும் வெளிச்சமு மில்லாமல் மிக்க அசுத்தமாயும் நெருக்கமாயும் இருக்கும் இடங்களில், நாலைந் தாகச் சேர்த்து அடைப்பதும், அப்புறம் இப் புறம்கூடத் திரும்பவும் படுக்கவும் முடியாதபடி சிறு கயிற்றினால் கட்டிவைப்பதும் அதற்குமிகவும் துன்பம் அல்லவா? வெளியில் மேய விடும்போதா வது அதைத் தாராளமாகப் போகவிடக்கூடாதா? அதன் கொம்புக்கும் காலுக்கும் சேர்த்து அண் ணந்தாள் போட்டு விட்டால் அது எவ்வளவு கஷ்டப்படும்? கழுத்துக்கும் காலுக்கும் சேர்த்துக் கட்டிவிட்டு நம்மை நடக்கச் சொன்னால் நாம் நடந்து செல்லுவோமா? பாவம்! பேச முடியாமல் அது இவ்விதகஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டு இருக்கிறது.

நல்ல ஆகாரமும் தண்ணீரும்கூட அதற்குப் போதுமான அளவு கிடைப்பது இல்லை. மண்

முதலிய அழுக்கு நிறைந்த ஆகாரத்தைத் தின்ப தனுல் அதற்கு வயிற்று வலி முதலிய கொடிய நோய்கள் உண்டாகின்றன. நாம் தினந்தோறும் குளிக்கிறோம் அல்லவா? அதுபோலவே பசுவை யும் தினந்தோறும் கழுவ வேண்டும். தகுந்த பாது காப்பு இல்லாவிட்டால் அதன் தேக சௌக்கியம் கெட்டு விடுகிறது. அதனுல், அது நமக்குத் தரும் பாலும் ஆரோக்கியம் இல்லாமற் போகும்.

பசுவோ மிகப் பயந்த சுபாவம் உடையது. பால் கறக்கும்போது அதை அடித்துப் பயப்படுத் தினுல் அது குறைவாகப் பால் தரும். நமது லாபத் தையும் அதன் நன்மையையும் குறித்துப் பசுவை நன்ருகப் பாதுகாப்பது நமது கடமையாகும். போதுமான நல்ல ஆகாரமும், தண்ணீரும், காற் றும், தங்குவதற்குத் தாராளமான நல்ல இடமும், அன்பான நடத்தையுமே பசுவின் இன்பமான வாழ்க்கைக்கு வேண்டுவனவாம்.

---

## 2. கன்றுக்குட்டி

அடுத்த பக்கத்தில் உள்ள படத்தில்இரண்டு கன்றுகள் இருக்கின்றன. ஒன்று தாய்ப் பாலைத் திருப்தியாகக் குடித்து அதனுல் பருத்து இருக் கிறது. அது சந்தோஷமாகத் துள்ளி விளையாடிக்

கொண்டும் இருக்கிறது. மற்றொன்றோ இளைத்துக் காணப்படுகிறது. அதன் உடம்பில் எலும்புகள் எல்லாம் தெரிகின்றன. அது நிற்கவும் முடியாமல் கஷ்டப்படுகிறது. அதற்குக் காரணம் என்ன தெரியுமா? போதுமான தாய்ப்பால் அதற்குக் கிடைக்கவில்லை. நமது குழந்தைகளும் வயிற்றுக்குப் பால் இல்லாவிட்டால் இளைத்து விடுகின்றன அல்லவா?



கன்றுகளை வஞ்சித்து இப்படியும் பால் கறந்து கொள்ளலாமா? அவைகளின் தாய்ப்பாலைக்கூட அவைகள் குடிக்கக் கூடாதா? நமக்கு எதிரில் ஆகாரத்தை வைத்துவிட்டு நாம் சாப்பிடப்போகும்

போது யாராவது தடுத்தால் நமக்கு எவ்வளவு வருத்தம் உண்டாகும்! பாவம்! குழந்தைக் கன்று கள் பேச முடியாமல் இரக்கம் இல்லாதவர்களின் கைகளில் அகப்பட்டுப் பட்டினி கிடந்து பிரா ணனை விடுகின்றன.

கன்றுகளுக்குப் பால் விடாமல் கறக்கும் போது தாய்ப் பசுக்கள் எவ்வளவு கஷ்டப்படுகின் றன தெரியுமா? பசுக்கள் தம் கன்றுகளை மிகவும் நேசிக்கின்றன. அவை, பகலில் மேய்ந்து விட்டு மாலையில் வீட்டுக்குத் திரும்பிவரும்போது, ஆசை யோடு தம் கன்றுகளைக்கூப்பிட்டுக்கொண்டே வரு கின்றன. கன்றுகளும், தாயின் குரலைக் கேட்ட வுடன் சந்தோஷத்தோடு கத்துகின்றன. இதனால் தாய்க்குக் குழந்தைகளிடம் இருக்கும் அன்பும், குழந்தைகளுக்குத் தாயினிடம் இருக்கும் ஆசை யும் தெரிகின்றன. பசுக்கள், கன்றுகளைக் காணு விட்டால் அநேக மைல்கள் தேடிச் செல்கின்றன; இறந்த கன்றுகளை நினைத்துப் பல நாள்கள் ஏக் கத்தோடு உண்ணாமலும் உறங்காமலும் நிற்கின் றன; அவைகளை அழைக்கும் அன்பான குரலால் அழைத்துக் கதறுகின்றன.

இவ்விஷயத்தில் நாம் செய்ய வேண்டியது என்ன! கன்றுகளைச் சரியாகக் காப்பாற்றாதவர்க ளிடம் நாம் பால் வாங்கக் கூடாது. அவ்வாறு

செய்தால் தான் இம்மாதிரியான கொடுமை தடுக்க முடியும். இல்லாவிட்டால் நாமே அந்தக் கொடு மைக்குக் காரணம் ஆகின்றோம்.

---



## 3. எருது

எருது நமக்கு மிகவும் உபயோகமானது. அது இல்லாவிட்டால் பயிர்த்தொழில் நடவாது. பயிர்த்தொழில் இல்லாவிட்டால் நமக்கு ஆகாரம் கிடைக்காது. நமக்குத் தினந்தோறும் ஆகாரம் அகப்படுவதற்குக் காரணம் எருதே. உணவுகொடுத் தவர் உயிர் கொடுத்தவர் அல்லவா? அவரைத் தெய்வமாகக் கொண்டாட வேண்டாமா? ஆகை

யால் நாம் எருதினிடம் எவ்வளவு அன்பு பாராட்ட வேண்டும் என்பதைக் கவனியுங்கள்.

நிலத்தை உழவும், தண்ணீர் இறைக்கவும், பொருள்களை ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு வரவும், நாம் ஏறிச் செல் லும் வண்டிகளை இழுக்கவும் எருது உபயோகப் படுகிறது. அதை வண்டியிலாவது, ஏரிலாவது, மற்ற விதத்திலாவது உபயோகப்படுத்தும்போது சிறு துன்பமும் அதற்கு உண்டாகாதபடி பார்க்க வேண்டும். அளவுக்கு அதிகமான சுமைகளை இழுக்கச் செய்வதும், சக்திக்கு அதிகமான வேலை வாங்குவதும் அதற்கு மிகுந்த துன்பத்தை உண் டாக்கும். உடல் நோயாக இருக்கும்போதும், கழுத் தில் புண்ணாக இருக்கும்போதும், கால் நொண்டி யாக இருக்கும்போதும் அதை வேலை வாங்கக் கூடாது. கொம்பினால் அடிப்பதும், தாற்றுக் கோலினால் குத்துவதும் அதற்கு அதிகமான உபத்திரவத்தை உண்டாக்கும்.

நமக்குப் பல விதங்களிலும் உபயோகப்படும் எருதை நாம் துன்பப் படுத்துவது நமக்கு இழிவு அல்லவா?

---

## 4. குதிரை

மனிதருக்கு உபயோகமுள்ள மிருகங்களில் குதிரையும் ஒன்று. அது நமக்குப் பல நன்மைகளைச் செய்கிறது. நாம் அதன்மேல் ஏறிச் சவாரி செய்கிறோம்; வண்டிகளில் பூட்டி ஓட்டுகிறோம். சில தேசங்களில் குதிரையை உழவுத் தொழிலுக்கும் உபயோகிக்கிறார்கள். நால்வகைப் படைகளுள் குதிரைப் படையும் ஒன்று.

குதிரையை அன்பாக நடத்தினால், அது நமக்குச் சந்தோஷமாக வேலை செய்யும். குதிரை எஜமானனோடு போர்க்களத்திற்குச் சென்று எதிர் பாராத ஆபத்துக்களுக்கு ஆளாகிறது. பீரங்கிகளின் வெடிகளையும் புகைச்சலையும் கவனியாமல், அது, தன் எஜமானனின் கட்டளையையே எதிர் பார்த்து நிற்கிறது. தன் புத்தி சாமர்த்தியத்தினால் அது அநேக ஆபத்துக்களிலிருந்து தன் எஜமானனைக் காப்பாற்றுகிறது.

இவ்வளவு உபயோகமும் அறிவும் உள்ள குதிரையைத் துன்பப்படுத்துவது தகுதியா? பல ஹீனமாய் இருக்கும்போதும், உடம்பில் சேணம் படும் இடங்களில் புண்ணாக இருக்கும்போதும், லாடம் சரியாக அடிக்காததனால் நொண்டிக் கொண்டு இருக்கும்போதும் அதை வண்டியில்

உபயோகப்படுத்தக் கூடாது. அப்படி உபயோகப் படுத்தினால் அதற்குக் கஷ்டம் அதிகம் ஆகும். தன்மேல் உட்காரும் ஈ முதலியவைகளை ஓட்டிக் கொள்ள அதன் வால் உபயோகமாக இருக்கிறது. அதைக் கத்தரித்துவிட்டால் அதற்கு எவ்வளவு துன்பம் உண்டாகும்! நம்முடைய கைகளைக் கட்டி விட்டால், நம்மேல் உட்காரும் ஈ முதலிய பூச்சி களை நம்மால் ஓட்டிக்கொள்ள முடியுமா ?

வேலை செய்வதற்குச் சக்தி குறைந்தபோது குதிரை, எருது முதலியவைகளைத் தெருக்களில் அலைந்து திரியவிட்டுவிடுவது மிகவும் கொடுமை. அப்படிச் செய்வதனால், அவைகள் உண்பதற்கு உணவும், குடிப்பதற்கு நீரும், தங்குவதற்கு நிழ லும் அகப்படாமல் வெயிலிலும், மழையிலும், பனியிலும், குளிரிலும் வருந்தித் தவிக்கின்றன. நாம் கிழவர்கள் ஆகிவிட்டால் நம்மை வீட்டை விட்டுத் துரத்திவிடுகின்றார்களா? இல்லையே! கிழப்பருவத்தில் தானே தகுந்த பாதுகாப்பு வேண் டும். பிராணிகளைச் சக்தியுள்ள வரையில் வேலை வாங்கிக்கொண்டு, சக்தி குறைந்தபோது வெளியில் துரத்தி விடுவது தருமம் ஆகுமா? இதற்கு உதார ணமாக ஒரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள்.

---

## 5. ஆட்ரி நகரத்து ஆராய்ச்சிமணி

இத்தாலி தேசத்தில் ஆட்ரி என்னும் நகரம் ஒன்று உண்டு. அதில் நல்ல அரசர் ஒருவர் இருந்தார். ஜனங்கள் சுலபமான நியாயம் பெறுவதற்காக அவர் அந்நகரத்துக் கடைவீதியில் பெரிய மணி ஒன்றைக் கட்டி இருந்தார். குற்றம் குறை உள்ளவர்கள் அந்த மணியை அடிப்பார்கள். மணியோசை கேட்டதும் நியாயாதிபதி வந்து விசாரித்துத் தகுந்த தீர்ப்புச் சொல்லுவார்.

அவ்வூரில் ஒரு பணக்காரன் இருந்தான். அவன் இளமைப் பருவத்தில் அதிக தாராளமாகச் செலவு செய்து ஆடம்பரமாக இருந்தான். ஆனால், வயது ஆக ஆக அவன் பெரிய உலோபி ஆனான். அதனால், அவன் தன்னிடம் உள்ள எல்லாப் பொருள்களையும் விற்றுக் கையில் ரொக்கமாகப் பணம் சேர்த்துக் கொண்டான். தன் அன்புள்ள ஒரு கிழக் குதிரையை மட்டும் அவன் விற்கவில்லை. சில நாட்களுக்குப் பிறகு, அந்தக் குதிரைக்கும் தீனி வைக்க அவனுக்கு மனம் வரவில்லை. அதனால், அவன் அதைத் தெருக்களில் அலைந்து திரியவிட்டு விட்டான். ஆனால், வேண்டும்போது மாத்திரம் அவன் அதை உபயோகப்படுத்திக் கொண்டான்.

இது இப்படி இருக்க, அந்த மணியில் இருந்த கயிறு அறுந்து விட்டது. அந்த வழியாகச் சென்ற இரக்கமுள்ள ஒருவன் ஒரு திராட்சைக் கொடியை அந்தக் கயிற்ருேடு கட்டி விட்டுச் சென்ருன். ஒருநாள் ஒரு கிழக் குதிரை ஆகாரம் அகப்படாமல், மணியில் கட்டி இருந்த திராட்சைக் கொடியைத் தின்ன எண்ணி அதைக் கடித்து இழுத்தது. இழுக்கவே மணி அசைந்து சத்தம் உண்டாயிற்று.



மணி ஓசை கேட்டவுடன் நியாயாதிபதி ஓடி வந்தார். அவர், அங்குப் பசியோடு நின்றுகொண்டு இருந்த கிழக் குதிரையைக் கண்டார். அங்கு இருந்தவர்களால் அதன் வரலாற்றை அவர் அறிந்து, 'இந்தக் குதிரை நியாயம் பெறும் மணியை அடித்ததால், இது நியாயம் பெறவேண்டியதாய் இருக்கிறது. அதனுல் இதன் சொந்தக்காரன், இதை இறக்கும் வரையில் தகுந்தபடி ஆகாரமும் இடமும் கொடுத்துக் காக்கவேண்டும்' என்று தீர்ப்

யச் செய்தார். அது முதல் பணக்காரன் தன் குதிரையை வெளியில் விடாமல் பாதுகாத்து வந்தான்.

தாம் கட்டிய மணியினால் அநுதாபவு செய்யப்பட்ட மிருகத்திற்கும் நியாயம் கிடைத்ததை அரசர் கேள்விப்பட்டார். அந்த மணியின் பெயர் உலகத்தில் எந்நாளும் பிரசித்தமாக இருக்கும் என்று அவர் சந்தோஷப் பட்டார்.

---

## 6. குதிரையின் எஜமான விசுவாசம்

ஐரோப்பாவில் ஒரு பிரபு இருந்தார். அவர் தமது ஒரு குதிரையோடு ஊருக்கு வெளியில் உள்ள வீட்டில் வசித்துவந்தார். ஒவ்வொருநாளும் படுக்கைக்குப் போகுமுன் அவர் தம் குதிரையைத் தட்டிக் கொடுப்பது வழக்கம். ஒருநாள் காலையில் அவர் வெகுநேரம் வரையில் படுக்கையை விட்டு எழுந்துவரவில்லை.



அதனால் அந்தக் குதிரை மிகுந்த ஆவலோடு தன் எஜமானன் இருந்த அறையைத் திறந்து பார்த்தது. அங்கு அவர் வியாதி யாயிருப்பதை அது கண்டது.

அவ்வீட்டிலோ வேறு ஒருவரும் இல்லை. அவரு
டைய சிநேகிதர் ஒருவர் அருகிலுள்ள ஊரில்
இருந்தார். குதிரைக்கு எஜமானன் உடம்பைப்



பற்றி மிக்க கவலை
யுண்டாயிற்று. அத
னால் அது அதிக
வேகமாகச் சிநேகி
தர் இருக்கும் ஊருக்கு
ஓடிற்று. அது அவர்
வீட்டை யடைந்த
போது, அவர் காலைச்
சிற்றுண்டியைச் சாப்
பிட்டுக் கொண்டிருந்
தார். அந்த நேரத்
தில் தன் நண்பனுடைய குதிரை அங்கு வந்த
காரணம் அவருக்
குத் தெரியவில்லை.
குதிரை அவர்
மேலாடையைக்
கடித்து இழுத்தும்
இன்னும் பல
விநோதமான செயல்
களைச் செய்தும் அவ
ரைத் தன்னோடு
வரும்படி ஜாடை



செய்தது. உடனே சிநேகிதர் அதைத் தொடர்ந்து

செல்லப்புறப்பட்டார். அக்குதிரை முன்னே



ஓடிற்று. சிநேகிதர் பின்னே சென்றார். ஓடும்போது அவர் பின்னே வருகிறாரா என்று அது திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டேசென்றது. அதுசிறிதும்பெரிதுமான சந்துகளிலும், மூலை முடுக்குகளிலும் நுழைந்து தன் எஜமானன் வீட்டை யடைந்தது.



பிரபுவின் வீட்டை யடைந்த நண்பர், தம் சிநேகிதர் வியாதியாக இருப்பதைக் கண்டார். உடனே அவர் வைத்தியரை அழைத்துக்கொண்டு வந்தார். வைத்தியர் பிரபுவுக்கு மருந்து கொடுத்து அவர் வியாதியைப் போக்கினர்.

குழந்தைகளே! குதிரையின் புத்திசாமர்த்தியத்தையும், எஜமான விசுவாசத்தையும் பாருங்கள்.

---



## 7. கழுதை

கழுதை உண்மையில் நல்ல குணங்களை உடையது. அது தெரியாத பலர் அதைப் பரிகாசஞ் செய்கிறார்கள். அது மந்தமும் பிடிவாதமும் உள்ள மிருகம் என்று எண்ணுகிறார்கள். அது அம்மாதிரியான குணங்களை உடைத்தாயிருக்கவில்லை.

சில சமயங்களில் அது பிடிவாதமாக இருக்கக் காரணம் என்ன தெரியுமா? அதிகமான சுமைகளைச் சுமக்கச்செய்தும், இரக்கமில்லாமல் அடிப்

பதும், அதன் முன் கால்களை முரட்டுக்கயிற்றினுல் கட்டி மேய விடுவதும் அதற்கு அந்தக் குணத்தை உண்டாக்குகின்றன. அதன் கால்களைக் கயிற்றுல் கட்டுவதனுல், கட்டும் இடம் புண்ணுய் விடுகிறது.

பல சமயங்களில் அதற்குக் குடிக்க நீரும் அகப்படுவதில்லை. அது தாகத்தோடு அலைந்து வருந்துகிறது. வெயிலிலும் மழையிலும் திரியும்படி அது வீதிகளில் விடப்படுகிறது. அதன் வாழ்க்கைக்கு வேண்டுவது மிகவும் சொற்பமான ஆகாரமும் தண்ணீருமே. அவைகளும் அதற்குத் திருப்தியாகக் கிடைப்பது இல்லை.

கழுதையை ஏழைகளின் நண்பன் என்றே சொல்லலாம். ஏனென்றுல், அதை வளர்ப்பது மிகவும் சுலபம். எல்லா மிருகங்களையும் விடக் கழுதையே அதிக பொறுமையுள்ளது. எஜமானன் அதை ஓர் இடத்தில் விட்டுச் சென்றுல், அவன் திரும்பி வரும் வரையில் அது அங்கேயே நின்றுகொண்டு இருக்கும். அதைக் கட்டவும் வேண்டாம்; பிடித்துக்கொண்டு இருக்கவும் வேண்டாம். மற்ற மிருகங்கள் இப்படிப் பொறுமையோடு இருப்பதில்லை. சில தேசங்களில் இதை ஏரிலும் கட்டி உழுகிறுர்கள். கழுதை செங்குத்தான மலைகளிலும், வழுக்கும் இடங்களிலும் சாயாமலும் சறுக்காமலும் செல்லும். அதனுல், மலைகளின்

மேல் சாமான்களைக் கொண்டு செல்வதற்கும், அங்கு இருந்து கீழே கொண்டு வருவதற்கும் கழுதை உபயோகப்படுகிறது. கழுதையின் குரலைச் சிலர் நல்ல சகுனமாகக் கொள்ளுகிறார்கள்.

கழுதையின் சராசரி வயது பதினைந்து. அதை நன்றாகக் காப்பாற்றினால், அது இறக்கும் வரையில் எஜமானனுக்குச் சந்தோஷமாக வேலை செய்யும்.

---

## 8. நாய்

நாய் மிகவும் நன்றியுள்ள பிராணி. அது எஜமானனைத் தன் உயிரைவிட அதிகமாக நேசிக்கிறது. மற்ற மிருகங்கள் தன் எஜமானர்கள் தம்மிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறார்களோ அவ்வளவே அவர்களிடம் அன்பு காட்டும். ஆனால், நாயோ எஜமானன் தன்னை அடித்தாலும், திட்டினாலும், பட்டினிப்போட்டாலும் அவன் பின்னாலேயே செல்லும். அவனுக்கு அது ஒரு தீங்கும் நினைக்காது. இந்த ஒரு குணமே நாயை எல்லா மிருகங்களையும் விட மேன்மைப் படுத்துகிறது.

தன் எஜமானன் ஏழையாகி உண்ண உணவும் இல்லாமல் கஷ்டப்படும்போது கூட, நாய் அவனைப் பிரபுவாக நினைத்துக் காக்கிறது. அது தன் பசி தாகத்தைக் கூடக் கவனியாமல் அவனோடு

செல்கிறது. அவன் படும் கஷ்டங்களை எல்லாம் தானும் படுகிறது. எஜமானன் கட்டளை இடுவ தற்கு முன்பே அது அவன் குறிப்பை அறிந்து செய்கிறது. அநேக சமயங்களில் நாய் தன் பிரா ணனையும் விட்டு எஜமானனைக் காக்கிறது. இம் மாதிரி நமது இரத்த சம்பந்த முள்ளவர்களும் சிநேகிதர்களும் இருப்பார்களா?

நமது நாட்டில் நாயை இழிவாக நினைக்கிறார் கள். ஆனால், மேல் நாடுகளிலோ அதை நன்றாக வும் மேன்மையாகவும் நடத்துகிறார்கள். நாயினால் உண்டாகும் உபயோகங்கள் பல. அவைகளைக் கவனிப்போம்.

நாய் தன் எஜமானனுடைய வீட்டையும் ஆஸ்தியையும் காக்கிறது. பட்டிநாய் இடைய னுக்கு எவ்வளவு உபயோகமாக இருக்கிறது! ஒரு பெரிய ஆட்டு மந்தையை ஒரு நாய் காப்பது போல இருபது மனிதர்களாலும் காக்கமுடியாது.

நியூபௌண்டுலாண்டு நாய்கள் தண்ணீரில் மூழ்கியவர்களைக் காப்பாற்றுவதற்குப் பழக்கப்படு கின்றன. பல சமயங்களில் நாய்கள் நெருப்பில் அகப்பட்டவர்களைக் கூடக் காப்பாற்றி இருக்கின் றன. எஸ்கிமோ நாய்களின் உதவியால் வட துரு வமும் (North Pole) தென் துருவமும் (South Pole) கண்டு பிடிக்கப்பட்டன.

ஸெயிண்டு பர்னூர்டு நாய்களின் உதவியால், ஆல்ப்ஸ் மலையில் உண்டாகும் பனிப்புயலில் அகப்பட்டுக்கொண்ட பல பிரயாணிகள் காப்பாற்றப் பட்டு இருக்கிறார்கள். நமது கிராமங்களிலும் நகரங்களிலும் இராக் காலங்களில் நாய்கள் போலீஸ்காரரைப்போல் ஊரைச் சுற்றிக் காவல் காக்கின்றன. அவைகளின் உதவியால் அநேக திருடர்கள் அகப்பட்டு இருக்கிறார்கள். யுத்த களங்களில் அடிபட்டு விழுந்தவர்களை மோப்பத்தால் கண்டுபிடிக்கவும், அவர்களிடம் வைத்தியர்களை அழைத்துச் செல்லவும், அவர்களுக்கு ஆகாரம் முதலிய கொண்டு கொடுக்கவும் நாய்கள் பழக்கப் படுகின்றன. அந்த நாய்களுக்கு ரெட்கிராஸ் நாய்கள் என்று பெயர்.



நெருப்பிலிருந்து குழந்தையைக் காப்பாற்றிய நாய்

நாயின் விசேஷ குணம் என்னவென்றால், தன் உயிருக்கே ஆபத்து உண்டாவதாக இருந்தாலும், அது தன் எஜமானனையும் அவன் உறவினர்களையும் ஆபத்திலிருந்து காக்கும்.



## 9. பிரின்ஸ்

இந்தப் படத்தில் இருக்கும் நாயின் பெயர் பிரின்ஸ். இதன் எஜமானன் அயர்லாந்து தேசத்தி லுள்ள ஒரு போர் வீரன். அவன் அதை அதிக மாக நேசித்து வந்தான். அதுவும் அவனிடம் அதிக அன்பாக இருந்தது.

ஜர்மனி யுத்தத்தில் 1914 வருஷம், செப்டம்பர் மாதம், அந்தப் போர் வீரன் பிரான்சு தேசத்துப் போர்க் களத்திற்கு அழைக்கப்பட்டான். அதனால், அவன் தன் அன்புள்ள நாயைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும்படி மனைவியிடம் சொல்லி

விட்டுப் பிரான்சுக்குப் போய்விட்டான். எஜமானனைப் பிரிந்த நாய் மிகுந்த விசனம் அடைந்தது. சில நாள்கள் வரையில் அது உண்ணவும் உறங்கவும் இல்லை. அந்தப் போர் வீரன் மனைவி அதை எவ்வளவோ சமாதானப்படுத்தியும், அது ஏக்கத்தோடே இருந்தது. அவள் ஒரு மாதங் கழித்து அந்த நாயோடு லண்டன் நகரத்துக்கு வந்தாள். அங்கும் அது முன்போலவே ஏங்கி இருந்தது.

ஒரு நாள் திடீரென்று பிரின்ஸ் காணாமற் போயிற்று. அப்பெண்மணி எங்குந்தேடியும் அது அகப்படவில்லை. அதனால் அவள் மிகுந்த வருத்தம் அடைந்து, தன் கணவனுக்கு அந்தச் சமாசாரத்தைத் தெரிவித்தாள். வருத்தம் அடைந்த அவள் சந்தோஷம் அடையும்படி, அந்த நாய் பிரான்ஸ் தேசத்தில் தன் எஜமானனோடு சௌக்கியமாய் இருப்பதாகச் சமாசாரம் வந்தது.

இங்கிலாந்தும் பிரான்ஸும் இங்கிலீஷ் சானல் என்னும் கடலால் பிரிக்கப்பட்டு இருப்பது யாவர்க்குந் தெரிந்த விஷயம். பிரின்ஸ், பிரான்ஸ் தேசத்துப் போர்க் களத்தில் இருந்த எஜமானனை எப்படி அடைந்தது என்பது இதுவரையில் யாருக்கும் தெரியவில்லை. ஆனால், கீழ்வரும் சில விவரங்கள் மாத்திரம் கிடைத்துள்ளன. பிரான்ஸிலுள்ள

போர்க்களத்திலிருந்த தன் எஜமானன் எதிரில் ஒருநாள் அது திடீரென்று போய் நின்றது. அது தன் எஜமானனைக் கண்டுபிடித்த மிகுந்த சந்தோஷத்தினால் வாலை ஆட்டிற்று. அருமைத் தோழனாகிய நாயைக் கண்டவுடன் அவ்வீரன் மிக்க ஆச்சரியம் அடைந்தான். அதைத் தன் படைத் தலைவனுக்கும் மற்றும் உள்ள வீரர்களுக்கும் காட்டினான். அந்த நாயின் அறிவையும் எஜமான விசுவாசத்தையும் எல்லோரும் புகழ்ந்து பேசினார்கள்.

குழந்தைகளே! இது எக்காலத்திலும் நடக்க முடியாத சிறந்த அற்புதச் செயல் அல்லவா!

---

## 10. கிரேபிரையர்ஸ் பாபி

சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன் ஸ்காட்லண்டு தேசத்தில் எடின்பரோ என்னும் ஊரில் ஒரு ஆட்டு இடையன் இருந்தான். அவனிடம் ஒரு நாய் இருந்தது. அதற்குப் பாபி என்றுபெயர். அது எஜமானனைத் தன் பிராணனைவிட அதிகமாக நேசித்தது. ஒரு நாள் அந்த இடையன் இறந்துவிட்டான். அவனை அவ்வூரில் இருந்த மாதா கோவிலில் புதைத்தார்கள். அவனுடைய நாயும், அவனைப் புதைத்த இடத்திற்குச் சென்று அங்கேயே இருக்க ஆரம்பித்தது.

மாதா கோவிலுக்குள் நாய்கள்செல்லக்கூடாது. அதனால், அங்கு உள்ள காவற்காரன் அதைப்பல தடவைகள் அடித்துத் துரத்தினான். அவன் எவ்வளவு துரத்தினாலும், அது திரும்பத்திரும்பவந்து எஜமானனைப் புதைத்தஇடத்தின்மேலேயேஇருந்தது. ஒரு நாள் பொறுக்க முடியாத குளிராக இருந்தது. அந்தக் குளிரிலும் அது தன் உடல்நடுங்க அங்கேயே இருந்தது. அதைக்கண்ட காவற்காரனுடைய மனம் இளகிற்று. அதனால் அவன் அதைத்துரத்துவதை நிறுத்திவிட்டான். பக்கத்திலுள்ள போஜன சாலையின் சொந்தக்காரன் அதன் குணத்தைக் கண்டு அதற்கு ஆகாரம் கொடுக்க ஆரம்பித்தான். தினந்தோறும் பன்னிரண்டு மணிக்குக் குண்டு போட்டவுடன் அது அங்குச் சென்று ஆகாரம் தின்று வரும்.



அதற்கு வரி கட்டுபவர் யாரும் இல்லாமற் போகவே, ஒரு சமயத்தில், நாய் அடிப்பவர்கள் அதைப்பிடித்துக்கொண்டார்கள். அருகில்இருந்த சில சிறுவர்களும் சிறுமிகளும் அதன்மேல் இரக்

கங் கொண்டு, பணம் வசூல் செய்து அதற்குக் கட்டவேண்டிய வரியைக் கட்டினார்கள். இதை அறிந்தமேல் அதிகாரி குழந்தைகளின் செயலுக்கு ஆச்சரியப்பட்டார். அவர், 'இனி இந்த நாய்க்கு வரி வேண்டியது இல்லை' எனக் கட்டளை இட்டார். இப்படிப்பட்ட எஜமான விசுவாசத்திற்கு அடையாளமாக அதன் கழுத்தில் ஒரு பட்டையும் கட்டி வைத்தார். அந்தப் பட்டையில் அந்த நாயின் பெயரும், அதைக் கட்டிய அதிகாரியின் பெயரும் எழுதப்பட்டு இருந்தன.

அதனுடைய அருமையான குணத்தைக் கண்டு மாதா கோவிலுக்கு வந்த பலரும் அதைச் சிநேகஞ் செய்து கொள்ள முயன்றனர். ஆனால் அது ஒருவருடனும் சேரவில்லை. அவ்விதமாக எஜமானன் சமாதியைப் பன்னிரண்டு வருஷங்களுக்குமேலும் காத்து இருந்து அது அங்கேயே இறந்துவிட்டது. அதையும் அதன் எஜமானனுடைய சமாதிக்கு அருகிலேயே புதைத்தார்கள். அந்த இடத்தில் அதன் ஞாபகத்துக்காக ஒரு தண்ணீர்த் தொட்டி கட்டி, அதன்மேல் அந்த நாயின் உருவச் சிலையும் செய்து வைத்து இருக்கிறார்கள். எல்லோருக்கும் அந்த நாயின் மேலான குணம் தெரியும் பொருட்டு, 'எஜமான பக்தி'

என்னும் பதம் அச்சிலையின் அடியில் செதுக்கப் பட்டிருக்கிறது.

குழந்தைகளே! அந்த நாய்க்கு எஜமான னிடம் இருந்த அன்பையும், அவன் இறந்தபிறகு வேறு ஒருவரோடும் சேர அதற்கு இஷ்டம் இல் லாமல் இருந்ததையும் பார்த்தீர்களா!

---

## 11. ஸேயிண்டு பர்னூர்டு நாய்கள்

ஸ்வித்சர்லாந்து தேசத்தில் ஆல்ப்ஸ் என் னும் ஒரு மலை இருக்கிறது. அதன் கணவாய் களின் வழியாக இத்தாலியா தேசத்திற்கு யாத் திரை செய்கின்றவர்கள் செல்ல வேண்டும். குளிர் காலத்தில் அங்குப் பனி அதிகமாக இருக்கும். அப்போது அங்குச் செல்வது மிகக் கஷ்டம். அது தெரியாத யாத்ரிகர் அங்குச் சென்று பனி யால் மூடப்பட்டு இறந்து விடுவது உண்டு.

அதை அறிந்த சில சந்நியாசிகள் ஒன்று சேர்ந்து அக்கஷ்டத்தை நீக்க முயன்றூர்கள். அவர்கள் அக்கணவாய்கள் ஒன்றில் மடம் கட்டிக் கொண்டு அங்கு வசிக்க ஆரம்பித்தார்கள். அவர் களில் முதன்மையானவர் ஸெயிண்டு பர்னூர்டு. அவர்கள் சில நாய்களைக்கொண்டுவந்து பிரயாணி களுக்கு உதவி செய்யும் வழிகளில் அவைகளைப்

பழக்கினூர்கள். நாய்களை அவர்கள் பழக்கிய விதம் மிகவும் ஆச்சரியமானது.

அவர்களில் ஒருவர் வெகு தூரஞ் சென்று பனியினுல் மூடிக்கொண்டு படுத்துக் கொள்வார். மற்றவர்கள் அவரைத் தேடிக் கண்டுபிடிக்க அந்நாய்களை அனுப்புவார்கள். அவைகள் அங்குப் பனியினுல் மூடப்பட்டவரை மோப்பத்தினுல் கண்டுபிடிக்கும். அவர் உடம்பை நாக்கினுல் நக்கி உஷ்ணத்தை யுண்டாக்கும்; அவைகளின் கழுத்தில் கட்டி இருக்கும் ஆகாரத்தை அவர் உண்பார். அவைகள், பிறகு அவரை மெதுவாக மடத்திற்கு அழைத்துச் செல்லும். இவ்வாறு அந் நாய்கள் பழக்கப்பட்டு அனேக பிரயாணிகளைக் காப்பாற்றி யிருக்கின்றன. அப்படிப்பட்ட நாய் களுள் மிகவும் கீர்த்தி பெற்றது பேரி என்பது.

---

## 12. பேரி

ஒரு நாள் இரண்டு பிரயாணிகள் பர்னூர்டு கணவாயின் வழியாகச் சென்ரூர்கள். அப்போது பனியும் குளிரும் மிக அதிகமாக இருந்தன. அவர்கள் அப்பனியில் அகப்பட்டுக் கஷ்டப்பட்டார்கள். அவர்களில் ஒருவன் மிகவும் வருந்தினுன். அவனுல் நடக்க முடியவில்லை. அதனுல்,

அவன் சிறிது சாராயத்தைக் குடித்தால் சௌக்கியம் உண்டாகும் என்று எண்ணிக் குடித்தான்.

சிறிது நேரத்தில் அவன் குடியினுல் மயக்கம் அடைந்து கீழே விழுந்து விட்டான். மற்றவன் எவ்வளவு முயன்றும் அவனுக்கு உதவிசெய்ய முடியவில்லை. அதனுல், அவன் ஸெயிண்டு பர்னுர்டு மடத்துக்குச் சென்று தன் நண்பனுக்கு உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டான். சந்நியாசிகள், பேரி என்னும் நாயைக் கூப்பிட்டு அந்தப் பிரயாணிக்கு உதவி செய்ய அனுப்பினுர்கள்.

அந்த நாய் தன் மோப்பத்தினுல் அவன் விழுந்து கிடக்கும் இடத்திற்குச் சென்றது. அவனுக்கு உஷ்ணம் உண்டாகும்படி அவன் உடம்பை நக்கிற்று. குடி வெறியினுல், அவன், அதை ஒரு துஷ்ட மிருகம் என்று நினைத்துக் கத்தியால் அதன் கழுத்தில் குத்திவிட்டான். அப்படிக் குத்தப் பட்டும், அந்த நாய் தன் நோயைப் பொறுத்துக் கொண்டு, அப்பிரயாணியை மிகுந்த கஷ்டத்துடன் தன் முதுகின்மேல் சுமந்து சென்றது. வழியெல்லாம் இரத்தம் ஒழுகிக்கொண்டேயிருந்ததனுல் அதன் பலம் குறைந்துகொண்டே வந்தது. அப்படி இருந்தும், அந்த நாய் தன் பிராணனைப் பிடித்துக் கொண்டு பிரயாணியை மடத்திற்குக்

கொண்டுவந்து சேர்த்துவிட்டது. உடனே அது மடத்தின் வாசலில் சோர்ந்து விழுந்து இறந்தது.

பேரி என்னும் அந்த நாய் இதற்கு முன் இவ்விதமாக நாற்பது உயிர்களைக் காப்பாற்றி இருக்கிறது. நாற்பத்தோராவது உயிரைக் காப்பாற்றச் சென்றபோது அது கொல்லப்பட்டது. பாரிஸ் நகரத்தில் அதன் ஞாபகத்திற்காக உருவச்சிலை ஒன்று வைக்கப்பட்டு இருக்கிறது. அதன் அடியில், 'நாற்பது உயிர்களைக் காத்து நாற்பத்தோராவதால் கொல்லப்பட்ட நாய்' என்று செதுக்கப்பட்டு இருக்கிறது.



---

## 13. நாயின் வீட்டு விருப்பம்

ஜர்மனி தேசத்தில் கொலோன் என்னும் இடத்தில் பிரிட்ஜ் ஜிம்மர் என்று ஒருவர் இருந்தார். அவருக்கு ரைன் நதிக் கரையில் ஒரு அழகிய வீடும் தோட்டமும் உண்டு. அவருடைய

அன்பான நாய்க்கு ஷென்டா என்று பெயர். அது ஒரு பெண் நாய். அதற்கும் அவரிடம் ஆசை அதிகம். அவர் அந்த நாய் வசிப்பதற்குத் தகுதியான இடம் ஒன்று தமது தோட்டத்தில் ஏற்படுத்தினார். ஷென்டா அங்குச் சந்தோஷமாக வசித்து வந்தது.

பிருட்ஜ் ஜிம்மருக்கு வீட்டில் ஏற்பட்ட சில மாறுதல்களினால் ஷென்டாவை வைத்துக் கொண்டு இருக்க முடியவில்லை. அதனால், அவர், ரைன் நதிக்கு அக்கரையில் தம்மைப்போல் வசித்து வரும் தமது நண்பருக்கு அதை விற்று விட்டார். அவர் விற்கும்போது அந்த நாய் சினையாக இருந்தது.

அந்த நண்பரும் தமது தோட்டத்தில் தகுதியான இடம் ஒன்றை ஏற்படுத்தி ஷெண்டாவை அதில் விட்டு வைத்தார். ஆனால், ஷெண்டாவுக்குப் புதிய இடத்தில் இருக்கப் பிடிக்கவில்லை. அது தன் பழைய வீட்டிற்குச் சென்றுவிட நினைத்தது. ஆனால், அப்போது அது சினையாகஇருந்ததனால், அதற்குப்போக முடியவில்லை. அதனால் அது சில நாள்கள் புதிய இடத்திலேயே இருந்தது.கொஞ்ச நாள்களுக்குப்பிறகு அது ஐந்து குட்டிகளைப் பெற்றது. அதன் பிறகு அது புதிய இடத்தில் ஒரு நிமிஷமும் இருப்பதற்கு விரும்பவில்லை. உடனே

அது ஒரு நாள் இரவு தன் பழைய வீட்டிற்குக் குட்டிகளோடு வந்துவிட நினைத்தது.

தனது புதிய வீட்டிற்கும் பழைய வீட்டிற்கும் மத்தியில் ரைன் என்னும் பெரிய நதி இருப்பதையும் அது கவனிக்கவில்லை. இரவு ஒரே இருட்டாக இருந்ததற்கும் அது பயப்படவில்லை. அது,




ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு குட்டியை வாயில் கௌவிக்கொண்டு, வேகமாகச் செல்லும் ஆற்று நீரில் நீந்திச் சென்று, எதிர் கரையை அடைந்து, தன் பழைய வீட்டில் குட்டிகளை வைத்தது. இவ்விதமாக அது ஒன்பது தடவைகள் அந்த நதியைத் தாண்டித் தாண்டிச் சென்றது.

ஆற்றில் பலமுறை நீந்தி வந்த அலுப்பினு லும், தன் பழைய எஜமானனைத் தூக்கத்திலிரு ந்து எழுப்பக் கூடாது என்ற எண்ணத்தினுலும் வென்டா அந்த இரவைத் தோட்டத்திலேயே கழித்தது. விடியற்காலையில் அது தன் எஜமான னுடைய படுக்கை அறைக்குச் சென்று கதவைக் கால் நகங்களால் பிருண்டிற்று.

அந்த ஓசையைக் கேட்டு ஜிம்மர் கதவைத் திறந்தார். தமது பழைய நாய் வாலை ஆட்டிக் கொண்டு நிற்பதைக் கண்டார். அதன் உடம்பெல் லாம் நனைந்து இருந்தது. அவருக்கு இன்ன தென்று விளங்கவில்லை.

வென்டா, தோட்டத்திலுள்ள தன் குட்டி களை நோக்கி ஓடுவதும், மறுபடியும் ஜிம்மரின் அருகில் ஓடி வருவதுமாகப் பல தடவை செய்து, அவரைத் தன்னேடு வரும்படி அழைத்தது. நாயின் செயலைக் கண்ட அவர், அதனேடு தோட் டத்திற்குச்சென்ருர். அது தன் பழைய இடத்தில் நின்று வாலை ஆட்டித் தன் குட்டிகளைப் பார்க்கும் படி ஜாடை செய்தது. அவர், அதில், கண் திறவாத ஐந்து சிறிய நாய்க்குட்டிகள் உடம்பெல்லாம் நனைந்து குளிரினுல் வருந்திக்கொண்டு இருப்ப தைக் கண்டார். அவர் அவைகளைச்சமையலறைக்கு எடுத்துச் சென்று, அடுப்பின் உஷ்ணத்தினுல்

அவைகளின் குளிரைப் போக்கினர். அன்று முதல் லெண்டா தன் பழைய எஜமானனிடமே இருந்துவிட்டது. பார்த்தீர்களா நாயின் எஜமான விசுவாசத்தையும், வீட்டு விருப்பத்தையும்!

இந்த விஷயம், 1930 வருஷம் ஜூலை மாதம் இங்கிலாந்தில் வெளி வந்த "மிருக நண்பன்" என்னும் மாதப் பத்திரிகையில் வந்துள்ளது.

---



மேல் உள்ள படத்தில் நீங்கள் இரண்டு நாய்களைப்பார்க்கிறீர்கள். ஒன்று சங்கிலியால் கட்டப்பட்டு இருக்கிறது. மற்றொன்று குழந்தைகளோடு விளையாடிக் கொண்டு இருக்கிறது. கட்டப்பட்டு இருக்கும் நாய் மிகவும் கஷ்டத்தோடு காணப்படுகிறது. கட்டப்படாமல் இருப்பது சந்தோஷமாக இருக்கிறது.

நாய், இயற்கையில் சுறுசுறுப்பும் இஷ்டப் படி ஓடி ஆடித் திரியும் குணமும் உடையது. அப்படிப்பட்ட பிராணியை ஒரே இடத்தில் சிறிய சங்கிலியினால் கட்டிவைப்பதால், அதன் தேகசௌக்கியம் குறைந்து வியாதி உண்டாகிறது. அதோடு, அதனுடைய இனிய குணமும் சந்தோஷமும் கெட்டு அதற்கு ஏக்கம் அதிகமாகிறது. எஜமானன் இல்லாத சமயத்தில் அது வாய்விட்டு அழுகிறது. அவன் எதிரில் இருந்தால் அது மௌனமாக வருந்துகிறது.

நன்ருகப் படித்தவர் வீடுகளிலும், நாய்களிடம் அன்பு உள்ளவர் வீடுகளிலும் நாய்கள் வாரக் கணக்காகக் கட்டி வைக்கப்படுகின்றன. யோசனையில்லாமல் செய்யுங் குற்றங்களில் இதுவும் ஒன்று. வேண்டுமென்றே இது செய்யப்படுவது அன்று. சுறுசுறுப்பும், மனிதனோடு சிநேகித்துக் கொள்ளும் குணமும் உடைய பிராணியை இம்மாதிரிக் கட்டிவைத்தால், அதற்கு எவ்வளவு மனக் கஷ்டம் உண்டாகும் என்பதைச் சிறிதும் அவர்கள்யோசிக்கிறது இல்லை. அவர்கள் சிறிது யோசித்துப்பார்த்தால் அதைக் கட்டிவைக்க மாட்டார்கள். வேறு சிலர், வேலைக்காரர்களை நம்பி அவர்களிடம் நாயை விட்டு விடுகிருர்கள். அவர்கள் அதை நன்ருகக் கவனிப்பதில்லை.

நாயின் காதுகளையும் வாலையும் வெட்டி விடு வது மற்றொரு கொடிய வழக்கம். நாய், வாலினால் தன் சந்தோஷத்தை வெளிக்காட்டுகிறது. அதை வேகமாக ஓடும் வண்டிகளின் பின்னால் ஓடிவரச் செய்வதும், குளிர்காலங்களில் விளையாட்டுக்காகத் தண்ணீரில் அனுப்புவதும், வீட்டுக்கு வெளியில் விட்டுவைப்பதும் அதன் தேக ஆரோக்கியத் தைக் கெடுத்துவிடுகின்றன. நாக்கின் வழியாக அது வியர்வையை வெளி விடுகின்றபடியால், அதன் வாயைக் கட்டி வைக்கக்கூடாது.

நல்ல இடமும், ஆகாரமும், தண்ணீரும், உடற் பயிற்சியும் தருந்தபடி கொடுக்க முடியாதவர் கள் நாய்களை வளர்க்கக்கூடாது.

---

## 14. பறவைகள்

பறவைகள் நமக்குச் செய்யும் மிக்க உதவிக்கு நாம் அவைகளைக் காப்பாற்ற வேண்டும். அவை களின் உதவி இல்லாவிட்டால், நாம் உண்ணும் தானிய வகைகளும், காய்கறிகளும், பழவகைக ளும் கிடைக்கமாட்டா. அவைகள் மரஞ் செடி கொடிகளை அழிக்கும் கெட்ட பூச்சிப் புழுக்களை அழிக்கின்றன. அப்படிப்பட்ட பறவைகளுக்கு நாம் தீங்கு செய்தால் நம்முடைய வாழ்க்கையை நாமே கெடுத்துக் கொண்டவர்களாவோம்.

பறவைகள், இலேசான உடலையும், இறகுகளையும் பெற்று இருப்பதால், சந்தோஷமாகப் பறந்து செல்கின்றன. அவைகளில் சில அழகாகப் பாடுகின்றன. வேறு சில அழகாக ஆடுகின்றன.

பறவைகளின் கூடுகள் எவ்வளவு நேர்த்தியாக இருக்கின்றன பாருங்கள். அவைகளை



அநேக வாரங்கள் அல்லது மாதங்கள் கஷ்டப்பட்டு அவைகள் கட்டுகின்றன. அவைகள், உலர்ந்த புல், வைக்கோல், சிறு குச்சுகள், அறுந்த கயிறுகள், பஞ்சு முதலியவைகளைத் தங்கள் அலகுகளினால் கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரித்துக் கூடுகளைக் கட்டுகின்றன. கூடுகள் கெட்டியாயிருப்பதற்குக் களிமண்ணால் ஓரங்களைக் கட்டுகின்றன.

கூடுகளின் மத்தியில் அவைகள் இருப்பதற்குப் பஞ்சு முதலியவைகளை மெத்தென்று பரப்பி இருக்கும்.

அப்படிக் கட்டிய கூடுகளில் அவைகள் முட்டை இடுகின்றன. அம்முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிவரும் வரையில் தாயும் தந்தையும் பொறுமையோடு காத்துக்கொண்டு இருக்கின்றன. குஞ்சுகள் வெளிப்பட்ட பிறகும் பெரிய பறவைகளுக்குக் கஷ்டம் விட்டபாடில்லை. குஞ்சுகள் பறந்து செல்லும் வரையில் அவைகளுக்கு ஆகாரம் தேடித் தருகின்றன. பட்சிகள் தங்கள் குஞ்சுகளிடம் எவ்வளவு அன்புகொண்டு இருக்கின்றன பாருங்கள். கூட்டினிடம் யாராவது சென்றால், அவைகள், தம் குழந்தைகளுக்கு என்ன தீங்கு நேரிடுமோ என்று எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கின்றன!

குழந்தைகளே! பக்ஷிகளின் சௌக்கியத்தின் பொருட்டு, மேல் நாடுகளில் பறவைகள் தங்குவதற்குத் தனியாக வசதிகள் ஏற்படுத்தி இருக்கிறார்கள். அவர்கள், நந்தவனங்களிலும், பொது இடங்களிலும் பறவைகள் கூடுகட்டிக்கொண்டு சௌக்கியமாக வசிப்பதற்காக மரக் கம்பங்களின் மேல் பக்ஷிகள் தங்குமிடம் (Bird Sanctuaries) கட்டி இருக்கிறார்கள். நமது நாட்டிலும், கோயில்களிலும், மசூதிகளிலும், பெரிய கட்டிடங்களிலும் பக்ஷி

கள் தங்குவதற்கு மாடங்கள் கட்டி இருக்கிறார்கள். அப்படி யிருக்க, பறவைகளின் முட்டைகளையும், குஞ்சுகளையும் திருடுவதும், அழிப்பதும், கூடு களைக் கலைப்பதும் மிகவும் கொடுமை யல்லவா?

பக்ஷிகள் ஆகாயத்தில் ஆனந்தமாகப் பறந்து திரிவதைப் பார்க்கும்போது, நாமும் அவ்வாறு பறந்து செல்லமாட்டோமா' என்று நமக்கு ஆசை உண்டாகிறது அல்லவா? ஆகாயத்தில் குளிர்ச்சி யும்,சுத்தமான காற்றும் நிறைந்து இருக்கின்றன. வண்டி முதலியவைகளால் உண்டாகும் சப்தமும் தூசி தும்பும் இரைச்சலும் அங்கு இல்லை. ஆகை யால், அங்கே பறந்து செல்வதனால் பறவைகள் சந்தோஷத்தையும் சௌக்கியத்தையும் அடைகின் றன. அதே காரணங்களால் மனிதர்களும் ஆகா யத்தில் பறக்க விரும்பி, தங்கள் அறிவி னாலும், சாமர்த்தி யத்தினாலும் ஆகாய விமானம் என்னும் பறக்கும் இயந்திரத் தைக் கண்டுபிடித் து இருக்கிறார்கள்.



அதைக் கண்டுபிடிக்க அனேக வருஷங்கள் பிடித் தன. எவ்வளவோ பணம் செலவழிந்தது. எத்

தனையோ மனிதர்கள் இறந்தனர். இவ்வாறு கஷ்டப்பட்டது எதற்காக? தாங்களும் பறவைகளைப் போல் ஆகாயத்திற் பறந்து இன்பத்தையும் சௌக்கியத்தையும் அடைவதற்கே அல்லவோ? இயற்கையாகப் பறந்து செல்லும் சக்தியைக் கடவுள் பறவைகளுக்கு மிகுந்த கருணையோடு கொடுத்திருக்க, நாம் அவைகளைப் பறக்க விடாமல் கூட்டில் அடைத்துவைப்பது தகுதியா?





இந்தப் படத்தில் கூட்டிற்குள் ஒரு பறவையும், வெளியில் மற்றொன்றும் இருக்கின்றன. கூட்

டினுள் இருக்கும் பறவை மிக்க விசனத்தோடு இருக்கிறது. வெளியில் இருப்பது ஆனந்தமாகப் பறந்து கொண்டு இருக்கிறது.

பறவைகள் சுத்தமான காற்றும், நீரும், இஷ்டமான உணவும் பெற விரும்புகின்றன. தம் இச்சைப்படி நிர்மலமான ஆகாயத்தில் சந்தோஷமாகப் பறந்து திரிய ஆசைப்படுகின்றன. அவைகளைக் கூடுகளில் அடைத்து வைப்பதனுல் அவைகளுக்குப்பல வியாதிகள் உண்டாகின்றன. அனேக பறவைகள் சீக்கிரத்தில் இறந்தும் போகின்றன.

சிலர், பறவைகள் கூட்டில் இருக்கும்போதும் பாடுவதால், 'அவைகள் சந்தோஷமாகத்தான் இருக்கவேண்டும்' என்று எண்ணுகிருர்கள். ஜெயிலில் அடைபட்டு இருக்கும் கைதியும் சில வேளைகளில் பாடிக் கொண்டு இருக்கிருன். அதனுல் அவன் சந்தோஷமாகஇருக்கிருன் என்றுசொல்ல முடியுமா ? தன் கஷ்டமான பாதையைப்போக்கிக் கொள்ளுவதற்கு ஏதோ பாடுகிருனே யன்றி, உண்மையில் அவனுக்குப் பாட மனம் வருமா ? அது போலவே, பறவைகளும் கூட்டில் அடைபட்டுஇருந்தால் தங்களுக்கு ஏற்படும்கஷ்டத்தைப் போக்கிக் கொள்ளப் பாடுகின்றனவே யன்றிச் சந்தோஷத்தோடு அவைகள் பாடுவதில்லை. அப்படிச் சில பறவைகள் பாடினுலும், நூற்றுக்கணக்

கான பறவைகள் சிறை வாழ்க்கையைத் தாங்க முடியாமல் மனக்கவலையோடு இறந்து போவதை அவர்கள் கவனிக்க வேண்டும்.

---

## 15. புறாக்கள்

புறாக்கள் சுலபமாக மனிதரால் பழக்கப்படுகின்றன. அவைகள் மனிதருடைய கைகளில் உட்கார்ந்து ஆகாரத்தைத் தின்னும். புறாக்களுக்குத் தங்கள் சொந்த வீடுகளின் மேல் விருப்பம் அதிகம். இதைத் தெரிந்து கொண்டு, மனிதர், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சமாசாரம் அனுப்ப அவைகளை உபயோகிக்க ஆரம்பித்தார்கள்.



யுத்த காலங்களிலும் அவ்விதமாக அவைகளைப் போர்க்களத்திலிருந்து சமாசாரம் தெரிந்துகொள்வதற்கு உபயோகப்படுத்தினார்கள். யுத்தங்களில் அவைகள் செய்த வேலைகளினால், நிலப்படை, நீர்ப்படை, ஆகாயப்படை முதலியவைகளில் அவைகளும் ஒரு பதவியைப் பெற்றிருக்கின்றன என்றே சொல்லலாம்.

ஒரே சமாசாரத்தை இரண்டு காகிதங்களில் எழுதி, இரண்டு புறாக்களின் கழுத்துக்களில் கட்டி அனுப்புவார்கள். அவைகள் வீட்டை நோக்கிச்

செல்லும் சந்தோஷத்தினுல், போர்க்களத்தி லிருந்து வெகு வேகமாகப் பறந்து செல்லும். எதற் காக இரண்டு புருக்களை ஒரே சமாசாரத்தோடு அனுப்புகிருர்கள் தெரியுமா? ஒன்று பகைவர்குண் டினுல் இறந்து விட்டாலும், மற்ருென்று தப்பிச் சென்று சமாசாரத்தைத்தெரிவித்துவிடும் என்றே அவ்வாறு செய்யப்படுகிறது.

ஒரு சமயம் ஒரு புரு மேற்கூறியபடி சமா சாரம் எடுத்துக் கொண்டு சென்றபோது பகை வரின் குண்டு அதன்மேல் படவே, அது கால் முறிந்து ஒரு வீட்டின் மாடியில் இறந்து விழுந்து விட்டது. அப்படி விழுந்தும் கூட அதை அனுப்பித்த காரியம் அனுகூலமாக முடிந்தது. அது கொண்டு வந்த சமாசாரத்தால் அநேக வீரர்களின் உயிர்கள் காப்பாற்றப்பட்டன.

மற்ருெரு சமயத்தில் ஒரு புரு 1200 மைல் தூரத்திலிருந்து மேற் கூறியபடி யுத்த களத்தி லிருந்து சமாசாரம் கொண்டு வந்து இருக்கிறது.

குழந்தைகளே !

முந்திய பாடங்களில் குதிரைகளும், நாய்க ளும் யுத்த களங்களில் போர்வீரர்களுக்கு உதவி செய்துள்ள விஷயங்களைப் படித்தோம். இதில், புருக்கள் கூடப் பல வீரர்களின் உயிர்களைக் காப் பாற்றியதைத் தெரிந்து கொள்கிருேம்.

## 16. ஒரு பெண்ணின் கனவு

ஒரு சமயத்தில் ஒரு பெண் கீழ்வருமாறு கனவு கண்டாள்.

"ஒரு பறவை தன் மனைவியோடும் குஞ்சுகளோடும் அதன் கூட்டில் சந்தோஷமாக உட்கார்ந்து கொண்டு இருந்தது. அப்போது ஒரு துஷ்டச் சிறுவன் அந்தக் கூட்டைப் பார்த்து உண்டை வில்லால் அடித்தான். அதில் இருந்த கல் தாய்ப்பறவையின் மேல் பட, அது உடனே இறந்து கீழே விழுந்தது. சந்தோஷமாக இருந்த சமயத்தில், திடீரென்று தன் மனைவி இறந்ததனால், ஆண் பறவை மிகவும் துக்கித்தது. குஞ்சுகளும் தாயைக் கூப்பிட்டுக் கதறின.

இப்படிப் பறவையும் குஞ்சுகளும் அழுது கொண்டு இருக்கும்போது அந்த வழியாக அந்தப் பெண் வந்தாள். அவள், அப்பறவைகளின் அழுகையைக் கேட்டு அம்மரத்தின் அடியிற் சென்றாள். அங்கு ஒரு பறவை இறந்து விழுந்து கிடப்பதைக் கண்டாள். அவள் மனத்தில் மிக்க இரக்கம் உண்டாயிற்று. அவள் மரத்தின் மேல் இருந்த பறவையைப் பார்த்து, "அழகிய பறவையே! நீயும் உன் குஞ்சுகளும் ஏன் இப்படி வருந்திக் கொண்டு இருக்கிறீர்கள்? உங்களுக்கு

என்ன நேர்ந்தது? உங்கள் கஷ்டத்தைக் காண என் நெஞ்சம் பிளக்கின்றதே,'' என்று மிகுந்த பரிதாபத்தோடு அதைக் கேட்டாள்.

அது கேட்ட ஆண் பறவை, "அன்புள்ள சிறுமியே! நீ பெண் ஆதலால் இரக்கத்தோடு என்



கஷ்டத்தைக் கேட்கிறாய். சிறிது நேரத்திற்கு முன் இரக்கமற்ற ஒரு துஷ்டப்பையன் உண்டை வில்லால் என் மனைவியை அடித்துக் கொன்று விட்டான். தாயை இழந்த குஞ்சுகள், "அம்மா, அம்மா' என்று கதறி அழுகின்றன. இவைகள் பிறந்து இன்னும் நான்கு நாள்கள் கூட ஆக

வில்லையே. இவைகளை வைத்துக் கொண்டு நான் எவ்வாறு காப்பாற்றுவேன்! ஐயோ! என் தலைவிதி இவ்வாறு ஆகவேண்டுமா!" என்று ஓவென்று அழுதது. அது கண்ட பெண், "பறவையே" உன் துக்கத்தைக் காண என் பிராணன் துடிக்கிறது. என்ன செய்யலாம்! நீயே இம்மாதிரி வருந்தினல் குழந்தைப் பறவைகள் என்ன செய்யும்? ஆகை யால் உன் துக்கத்தை மறந்து குஞ்சுகளைச் சமா தானப்படுத்து" என்று கூறினள்.

அதனல், ஆண்பறவை தன் துக்கத்தை ஒரு வாறு அடக்கிக்கொண்டு அப்பெண்ணை நோக்கி, "குழந்தாய்! ஏனே மனிதர்கள் பிராணிகளிடம் இப் படி இரக்கம் இல்லாதவர்களாக இருக்கிருர்கள்? அவைகள் தங்களால் முடிந்த உதவியைச் செய்கின் றனவே ஒழிய, அவர்களுக்குச் சிறு தீங்கும் நினைப் பது இல்லையே. என்ன உலகம்! என்ன வாழ்வு! உபகாரஞ் செய்பவர்களுக்கு அபகாரஞ் செய்வதா உலக இயற்கை! இதைப்பற்றிக் கேள்வி முறை இல்லையா? ஒரு சிறுவனுக்கு ஏதாவது ஒரு சிறு அடி பட்டுவிட்டால் எத்தனை சிநேகிதர்களும் பெரியோர்களும் அதை விசாரிக்கவும், அவனுக்கு உதவி செய்யவும் ஓடி வருகிருர்கள்? சிறுவர்கள், பக்ஷிகளை உண்டை வில்லால் அடிப்பதும், அவை களின் முட்டைகளையும் குஞ்சுகளையும் திருடுவ

தும், கூடுகளைக் கலைப்பதும் வேடிக்கை என்று நினைத்துச்சிறிதும்யோசிக்காமல் செய்கிறீர்களே! உண்டைவில்லால் அடிப்பதால் சில சமயங்களில் பக்ஷிகள் சாகிறதில்லை. அவைகள் குற்றுஉயிராய்க் கீழே விழுந்து வெகு நேரம் துன்பப்படுகின்றன. அன்பு, தயை, இரக்கம், நன்றிமறவாமை முதலியவைகள் பள்ளிக்கூடங்களிலும் வீடுகளிலும் அவர்களுக்குக் கற்பிக்கப்படுவது இல்லையா? இவைகளைக் கற்பிக்காதபடிப்பு சரியான படிப்பு ஆகுமா? பிராணிகளிடத்தில் அன்பு இல்லாதவன் மனிதரிடத்தில் அன்பாக இருப்பானு? எல்லாப் பிராணிகளிடமும் அன்பாக இருக்கும்படி அவர்களுக்கு இளம்பிராயத்திலேயே நன்ருகக் கற்பித்தால், அவர்கள் தயை உடையவர்களாக ஆகமாட்டார்களா?" என்று கூறிற்று.

பறவையின் பேச்சைக் கேட்ட பெண், "ஆம், நீ சொன்னதெல்லாம் உண்மையே. சிறுவர்கள் நல்ல வழிகளில் பழக்கப்பட்டால் பிற்காலத்தில் நமது தேசம் மிகுந்த நன்மையை அடையும். அவர்களுக்குச் சாதுத் தன்மை, இரக்கம், அன்பு, முதலியவைகளைப்போதிப்பதனுல் அவர்கள் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுத் தேசத்தில் நல்லவர்களாக விளங்குவார்கள். அதனுல் நமது நாட்டில் குற்றங்கள் மிகவும் குறைந்துவிடும். இது விஷய

மாக நான் ஊக்கத்துடன் இனிப் பாடுபடுகிறேன். எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை செய்யும் வழிகளைத் தேடுகிறேன்." என்று கூறினாள். பிறகு, பறவை ஒருவாறு மனம் தேறிற்று."

அந்தப் பெண் தூக்கத்திலிருந்து எழுந்தாள். தான் கண்ட கனவைப்பற்றி ஆச்சரியம் அடைந்தாள். அந்தக் கனவு பிராணிகளுக்கு நன்மையை உண்டுபண்ணுவதாக இருந்ததனால், அவள் கனவில் கண்டபடியே அன்றுமுதல் பிராணிகளுக்கு உதவி செய்ய ஆரம்பித்தாள். அவள் வாழ்நாள் முழுவதும் ஜீவகாருண்யம் நிறைந்தவளாகவே இருந்தாள்.

பிளாரன்சு நைடிங்கேல் என்னும் ஒரு ஆங்கிலச் சிறுமி சிறுவயதில் பிராணிகளிடத்தில் அன்பாக இருந்தாள். அவள், அவைகளுக்கு வியாதி உண்டான போது சிகிச்சை செய்தாள். இவ்வாறு சிறுவயதிலேயே அவளுக்குப் பிராணிகளிடத்தில் இருந்த அன்பினால், அவள் பெரியவளான பிறகும், கிருமியன் யுத்தத்தில் காயமடைந்த ஆங்கிலப்போர்வீரர்களுக்கும் சிகிச்சைசெய்தாள்.

குழந்தைகளே! மேலே சொன்ன இரண்டு பெண்களில் ஒருத்திக்கு,பிராணிகள்படும் கஷ்டத்தைக் கனவினால் கண்டதனாலேயே ஜீவ காருண்யம் உண்டாயிற்று. மற்றொருத்திக்கு, இளம்

பிராயத்தில் பிராணிகளிடத்தில் காட்டி வந்த அன்பினாலேயே பிறகு மனிதர்களிடத்திலும் அன்பு உண்டாயிற்று.

---




## 17. கோழிகள்

சிலர் கோழியைச் சாதாரணமாய் அறிவில்லாததும் மந்தமானதும் என்று நினைக்கிறார்கள். அதுவுமல்லாமல், அதை முட்டைகளிடும் ஒரு யந்திரமே தவிர, அரிய குணங்களை யுடையதும் விரும்பத் தகுந்ததுமான ஒரு பறவை என்று நினைக்கிறதில்லை. கோழியின் புத்திசாலித்தனத்தை அறிய வேண்டுமானால், தாய்க் கோழி தன் குஞ்சுகளோடு உலாவித்திரியும்போது அவைகளோடு

பேசுவதையும், அவைகளிடத்தில் காண்பிக்கும் அன்பையும் கவனிக்கவேண்டும். ஆகாரம் கிடைப்பதாயிருந்தாலும் அல்லது குஞ்சுகளுக்கு அபாயம் வரும்படியாக இருந்தாலும் அது அவைகளை வெவ்வேறு விதமாகக் கூவி அழைக்கும்.

சேவல் விடியற் காலையில் எழுந்து 'கொக்கரக்கோ' என்று கூவி நம்மைத் தூக்கத்திலிருந்து எழுப்புகிறது. அதனால் நாமெல்லோரும் அதிகாலையில் கடவுளைத் தியானம் செய்வதற்கு உதவியாக இருக்கிறது. கிராமங்களில் குடியானவர்களுக்குக் கோழி கடிகாரம் போல் உதவுகிறது. அதன் கூவுதலைக்கேட்டவுடன் அவர்கள் எழுந்து வேலைக்குச் செல்லுகிறார்கள். அது கூவுவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. அதாவது, அது தன் பெட்டையை எழுப்பிச் சீக்கிரமாக ஆகாரம் தேடக் கூப்பிடுகிறது. ஏனென்றால், எது முதலில் எழுந்து வருகிறதோ அதற்கே ஆகாரம் கிடைக்கும். இதைக் குறித்து ஒரு பழமொழியும் உண்டு. 'விடியற்காலையில் வெகு சீக்கிரம் எழுந்திருக்கும் பறவைக்கே ஆகாரம் கிடைக்கும்!' சேவலின் இனிய குரலைப் புலவர்கள் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள்.

சேவற்கோழியின் தலையில் அழகான ரோஜா வர்ணமுள்ள கொண்டை உண்டு. அது வியாதி

யாயிருந்தால், அந்தக் கொண்டை வெளுத்து விடும்.

பெட்டைக் கோழிக்கு தன் குஞ்சுகளிடம் எவ்வளவு அன்பு இருக்கிறது தெரியுமா? அது முதலில் முட்டை இடுகிறது. பிறகு இருபத்தொரு நாள் பொறுமையோடு அவைகளின் மேல் உட்கார்ந்து அடை காக்கிறது. அக்காலங்களில் இரை தேடிச் செல்லவும் அதனால் முடிவது இல்லை. முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளி வந்த பிறகும் அதன் கஷ்டம் குறைந்தபாடில்லை. குஞ்சுகளுக்கு ஆகாரம் சம்பாதித்துத் தருவதும், அவைகளை விரோதிகளிடம் இருந்து காப்பதும் அதற்குப் பெரிய வேலைகளாகின்றன. அது தன் குஞ்சுகளுடன் ஆகாரம் தேடிக்கொண்டு இருக்கும்போது பூனையோ, நாயோ அல்லது பருந்தோ வந்துவிட்டால் ஒரு விதமாகக் கூவும். அக்குரலைக் கேட்டவுடன் குஞ்சுகள் ஓடி வந்து தாயின் இறகுகளின் கீழ்ப் பதுங்கிக் கொள்ளும். சில சமயங்களில், தாய்க் கோழி தந்திரமாக விரோதிகளின் கண்களைக் குத்தி அவைகளைத் துரத்தித் தன் குஞ்சுகளைக் காப்பதும் உண்டு.

கோழிகள் தோட்டக்காரர்களுக்கு மிகவும் உபயோகமானவை. பயிர்ப் பச்சைகளை நாசம் செய்யும் பூச்சிப் புழுக்களை அவைகள் அழிக்கின்றன.

கோழிகள் காற்றின் சீத உஷ்ண நிலைமையைத் தெரிந்து கொள்ளும் சக்தி யுடையவை. சில சமயங்களில் பெரிய புயல் காற்று வருவதைச் சீத உஷ்ண நிலைமையைக் குறித்துச் சொல்லும் சாஸ்திரத்தில் வல்லவர்களாலும் சொல்லமுடிவதில்லை. ஆகாயம் கறுத்து மிருந்த இடியும் மின்னலுமாக இருந்தாலும்கூடக் கோழிகள் கவனிப்பது இல்லை. ஆனால், புயல் காற்று வருவதாயிருந்தால் அவைகள் வெகு சுலபமாக அறிந்து கொண்டு உள்ளே போய்ப் பதுங்கிக் கொள்ளும்.

இப்படி அறிவும் உபயோகமும் உள்ள பறவைகளைச் சிறு கூடைகளில் நிற்கவும் முடியாமல் ஒன்றின்மேல்ஒன்றாக அடைப்பதும், நாலைந்து கோழிகளின் கால்களை ஒன்றாகக் கட்டித்தலை கீழாக எடுத்துக்கொண்டு போவதும், இன்னும் வேறு விதமாகத் துன்பப் படுத்துவதும் தகுதியா? சிலர், அவைகளை, இறகுகளாலான ஒரு மூட்டை என்று நினைக்கின்றார்களே ஒழிய, அவைகள் உயிர் உள்ளவை என்றும், அப்படித் தூக்கிக் கொண்டு போவதனால் மிகவும் கஷ்டப்படும் என்றும் நினைக்கிறதேயில்லை. பாவம்? அவைகளை அப்படிக் கஷ்டப்படுத்தும் போது அவைகள் நமது குழந்தைகளைப்போல் அழுகின்றன அல்லவா? அந்த அழுகையைக் கேட்டும் மனம் கொஞ்சமும்

இளகாமல் இருக்கின்றார்களே! இது என்ன கொடுமை!

---



## 18. ஒரு கோழியின் அறிவு

அமெரிக்கா கண்டத்தில் வெஸ்டு இண்டீஸ் என்னும் தேசத்தில் உள்ள கவர்னர் பங்களாவில் ஒரு சேவலும் அதன் மனைவியும் வாழ்ந்து வந்தன. அவைகள் நன்றாகக் கொழுத்துப் பருத்துப் பார்வைக்கு அழகாக இருந்தன. அவைகள் எப்போதும் ஒன்றை விட்டு ஒன்று பிரிவது இல்லை. சேவல் அழகிய வெண்மை நிறமானது. அதன் இறகுகள் வெள்ளித் தகடுகளைப் போல் பிரகாசித்

தன. ஆகையால் அதற்கு, 'வெள்ளி மார்டினீக்' என்று பெயர் வைக்கப்பட்டது. அதன் அழகை யும் கம்பீரமான தோற்றத்தையும் பார்த்து அனே கர் அதனோடு சினேகஞ் செய்து கொள்ள முயன் றார்கள். ஆனால் அது வெகுநாள் வரையில் ஒரு வருடனும் சினேகிக்கவில்லை.

அந்தப் பங்களாவில் உள்ள மரஞ்செடி கொடிகளுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சுவதற்காகச் சற்று உயரமான இடத்தில் ஒரு பெரிய தொட்டி கட்டி இருந்தது. அந்தக் கோழிகள் இரண்டும் தினந்தோறும் அந்தத் தண்ணீர்த் தொட்டியின் விளிம்பின் மேல் உட்கார்ந்து தண்ணீர் குடித்துச் செல்வது வழக்கம்.

ஒரு நாள் தொட்டியில் தண்ணீர் கொஞ்சங் குறைவாக இருந்தது. அன்று கோழிகள் வழக் கம் போல் தண்ணீர் குடிக்கச் சென்றன. அப் போது பெட்டைக் கோழி தவறித் தொட்டிக்குள் விழுந்து விட்டது. பக்கத்திலிருந்த சேவல் தன் மனைவி தண்ணீரில் விழுந்துவிட்டதைக் கண்டு திகிலடைந்து, தன்னால் மனைவிக்கு உதவி செய்ய முடியாது என்று அது தெரிந்து கொண்டது. என்ன செய்வது என்று அதற்குத் தெரியவில்லை. பெட்டையோ தண்ணீரில் தத்தளித்துக்கொண்டு இருந்தது.

இவைகள் இப்படி ஆபத்தில் அகப்பட்டுத் தவித்துக் கொண்டு இருக்கும்போது, அந்த வழி யாக ஒரு பிரபு வந்தார். அவரைப் பார்த்த சேவல் தன் மனைவியின் உயிரை அவரால் காப்பாற்றமுடி யும் என்று நினைத்தது. உடனே அது பரபரப் புடன் பறந்து வந்து அவர் வழியைத் தடுத்து, அவர் காலை மூக்கினால் கொத்தி, தனது இறகுகளி னால் பல முறை அடித்தது. தன் மனைவிக்கு உதவி செய்யவேண்டும் என்பதற்கு அடையாள மாக அந்தத் தொட்டியை நோக்கிப் பல தரம் ஓடிற்று.

சேவல் இவ்வாறு செய்ததன் கருத்து அந்தப் பிரபுவுக்குத் தெரியவில்லை. வேலைக்காரர்கள் சில சமயங்களில் சாராயத்தோடு கலந்த உணவை அதற்குக் கொடுப்பது வழக்கம்; ஆகையால், அவ் விதமான உணவை உண்டதனால் அது அவ்வாறு வெறிகொண்டு இருக்கலாம் என்று அவர் நினைத் தார். அவர் அவ்வாறு யோசித்துக்கொண்டுஇருக் கும்போது தண்ணீர்த் தொட்டியில் சலசலவென்று சப்தம் உண்டாயிற்று. உடனே பிரபு அந்தத் தொட்டியினிடம் சென்று பார்த்தார். அதில் பெட்டைக் கோழி அப்போது தான் மூழ்கிக் கொண்டு சாகும் சமயத்தில் இருந்தது. பிரபு உடனே அதை எடுத்து வெளியில் விட்டார்.

அதன் துன்பம் போகும்படி சிகிச்சை செய்தார். பிறகு பெட்டைக்கோழிக்கு உயிர் வந்தது.

தன் மனைவி பிழைத்து விட்டதை சேவல் கண்டு சந்தோஷித்தது. அதைக் காப்பாற்றிய பிரபுவுக்குத் தனது நன்றிபாராட்டலை அது தெரிவித்தது. அன்று முதல் அவைகள் இரண்டும் அந்தப் பிரபுவோடு வெகு நேசமாக இருந்தன. அவர் வெளியில் சென்றபோதெல்லாம் அவரோடு அவைகளும் செல்லும்.

குழந்தைகளே! கோழிகளுக்கும், மனைவி, கணவன் என்கிற அன்பு இருப்பதைப்பாருங்கள்!

---

## 19. பூச்சிகள்

நாம் நமது ஆனந்தத்திற்காக மரஞ் செடி கொடிகளும் வயல்களும் நிறைந்த நாட்டுப் புறங்களுக்குப் போகிறோம். அங்கே பார்க்கப் பார்க்க மனத்துக்குச் சந்தோஷத்தையுண்டாக்கும் பொன் வண்டு, பட்டுப்பூச்சி, தட்டாரப்பூச்சி, வண்ணாத்திப்பூச்சி, தேன் வண்டு முதலிய பல பூச்சிகளை நாம் காண்கிறோம். அவைகளின் அழகையும், செயல்களையும் கண்டு நாம் ஆனந்திக்கவேண்டுமே ஒழிய, அவைகளை அழிக்கக் கூடாது.

சிலர், கைத்துப்பாக்கி, உண்டைவில் முதலியவைகளை எடுத்துச் சென்று அப்பிராணிகளைத் துன்பப்படுத்துவது மிகவும் அநியாயமானது

அல்லவா? கயிறுகளைக் கட்டிப் பொன்வண்டு, தும்பி முதலியவைகளைப் பறக்கவிடலாமா? அவை கள் துடிக்கத் துடிக்க வால்களில் குச்சுகளையும் முட்களையும் குத்தலாமா? அவைகளுக்குப் பிரா ணன் இல்லையா? அவைகளுக்குமட்டும் நோகாதா? அப்படிப் செய்வதனால் அவைகள் எவ்வளவு கஷ்டப்படும் என்பதை யோசித்துப் பாருங்கள். நமது உடம்பில் சிறு குண்டூசி குத்தினாலும் நாம் எப்படித் துடிக்கிறோம்?

இன்னும் சிலர் குளங் குட்டைகளிலுள்ள தவளைகளுக்கும் பல தீங்குகள் செய்கின்றனர். தவளைகள் தண்ணீரிலுள்ள அழுக்குகளைப் போக் கித் தண்ணீரைச் சுத்தப்படுத்துகின்றன. அவை கள் தோட்டங்களிலுள்ள கெட்டப் பூச்சிகளை அழித்துத் தோட்டக்காரர்களுக்கும் உதவிசெய் கின்றன.

நாம் ஒவ்வொரு பிராணியிடத்திலும் அன் பாக இருந்து, அது செய்யும் ஆச்சரியமான வேலைகளைக் கவனிப்போமானால், எறும்பு முதலிய சிறு பிராணிகளின்மீதும் கால் வைப்பதற்கும் அஞ்சுவோம்.

குழந்தைகளே! சிறு பூச்சிகளுக்கு ஒரு விதமான தீங்கும் செய்யாதீர்கள். அப்படிச்செய்வ தனால் அவைகள் மிகவும் துன்பப்படும். அவை களைக் கஷ்டப்படுத்தித் துடிக்கத் துடிக்கப் பார்ப்

பதைவிட, கடவுள் சிருஷ்டியில் அவைகள் எவ்வளவு நேர்த்தியாக இருக்கின்றன என்பதைக் கண்டு சந்தோஷப்படுங்கள்.

---

## 20. பிராணிகளின் வேண்டுகோள்

பசுக்கள், கன்றுகள், எருதுகள், குதிரைகள், நாய்கள், கோழிகள் முதலியவைகளை வைத்துக் கொண்டு இருக்கும் எஜமானர்களே!

“உங்களையும் உங்கள் பொருள்களையும் வண்டிகளில் இழுத்துச் சென்றும், பாதுகாத்தும், இன்னும் பல விதங்களிலும் உங்களுக்கு நாங்கள் ஊழியம் செய்கின்றோம். நாங்கள் தேக ஆரோக்கியமாக இருக்கும்போது எங்களுக்குச் சக்தியுள்ள மட்டும் உங்களுக்கு வேலை செய்யத் தயாராகவும் இருக்கின்றோம். அப்படிப்பட்ட நாங்கள் உங்களை வேண்டிக் கொள்வது என்னவென்றால்:—

எங்களுடைய பசி தாகங்களை எங்களால் வாய்விட்டுச் சொல்ல முடியாது. ஆகையால் எங்கள்மேல் இரக்கங் கொள்ளுங்கள். எங்களுக்குத் தேவையானவைகளை நீங்களே தெரிந்து செய்யுங்கள். எங்களை அன்பாகவும், திருப்தி உண்டாகும்படியாகவும் நடத்துங்கள்.

எங்களுக்கு உடம்பில் புண்ணாக இருக்கும் போதும், வேலை செய்யப் போதுமான சக்தியில்லாதபோதும், வேறு எவ்விதமான வியாதியாயிருக்

கும்போதும், எங்களிடமிருந்து வேலை வாங்குகிறீர்கள். எங்களுக்குத் தகுந்த மருந்து கொடுத்து எங்கள் வியாதியைப் போக்குங்கள்.

வெயிற்காலங்களில் நாங்கள் குடிப்பதற்குக் சுத்தமான தண்ணீர் கிடைக்காமல் தவிக்கிறோம். வெகுதூரம் பிரயாணம் செய்வதனால் எங்களுக்கு ஏற்படும் களைப்பு நீங்கும்படி குளிர்ந்த நல்ல தண்ணீரைக்கொடுங்கள். அநேக புண்ணியவான்கள் நாங்கள் குடிப்பதற்காகத் தண்ணீர்த் தொட்டிகள் கட்டிவைத்து இருக்கிறார்கள். ஆனால், அந்தத் தொட்டிகளிலுள்ள தண்ணீரை நாங்கள் குடிப்பதற்கு முடியாதபடி அனேகர் அசுத்தப் படுத்துகிறார்கள். மனிதர்கள், குளிப்பதற்கும், கைகால்களைக் கழுவுவதற்கும், பாத்திரங்களைத் தேய்ப்பதற்கும் அந்தத் தண்ணீரை உபயோகிக்கிறார்கள். சில சமயங்களில், மோட்டார் வண்டிக்காரர்கள், அவைகளில் பெட்ரோல் எண்ணெய் டின்களைத் தோய்த்துத் தண்ணீரைக் கெடுக்கிறார்கள். எங்களுக்காக வைக்கப்பட்டு இருக்கும் தண்ணீரை இப்படி அநேக விதங்களில் அசுத்தமாக்கி, எங்களுக்கு உபயோகமாகாதபடி செய்வது மனிதர்களுக்குத் தருமம் ஆகுமா? அதனால், போதுமான நல்ல தண்ணீரைக் கொடுத்து, எங்களைச் சந்தோஷமடையும்படி செய்யுங்கள்.

நாங்கள் உங்களையே தெய்வமாக நினைக்கிறோம். எங்கள் இன்பமான வாழ்க்கை உங்கள் கைகளில் இருக்கிறது. ஆகையால் எங்களிடம் எப்போதும் அன்பாக இருங்கள்; இனிமையாகப் பேசுங்கள், உங்கள் அன்பான நடத்தையும், இனிமையான பேச்சுக்களும் வீண் போகா. ஏனென்றால், அவைகள் எங்களுக்கு உற்சாகம் கொடுத்து இன்னும் அதிகமான வேலைகளைச் செய்யும்படி தூண்டுகின்றன.

சுருக்கமாகச் சொல்லுமிடத்து, நாங்கள் சுகமாயும் சந்தோஷமாயும் ஜீவிப்பதற்கு வேண்டுவன மிகவும்சொற்பமானவையே. அவையாவன:- நல்ல ஆகாரமும், சுத்த தண்ணீரும், தங்குவதற்குப் போதுமான இடமும், அன்பான நடத்தையுமே. ஆகையால், எங்கள் வாழ்க்கையை அவைகளால் தயவு செய்து சந்தோஷப்படுத்துங்கள்."

இப்படிக்கு,

உங்கள் ஊழியர்களான,

வாயில்லாப் பிராணிகள்.

---

## 21. சாரண வாலிபன்

### A Scout

சாரணச் சட்டங்களில், சாரணச் சிறுவனும் சிறுமியும் எல்லாப் பிராணிகளிடமும் அன்பாகவும் சினேகமாகவும் இருக்க வேண்டும்" என்ப

தும் ஒன்று. சிநேகம் என்றால் என்ன? மற்றொருவருக்குக் கஷ்டம் உண்டானபோது, அதைக் கண்டு மனம் இரங்கி, அதைத் தனக்கு வந்தது போலவே நினைத்து, அத் துன்பத்தை நீக்க முயற்சி செய்வதே ஆகும். அப்படிச் செய்பவனே உண்மையான சிநேகிதன் ஆவான். அம்மாதிரியே வாயில்லாப் பிராணிகளிடமும் அன்பு கொண்டு, அவைகளின் துன்பத்தைப் போக்க முயற்சி செய்வதே சாரணர்களின் முக்கிய கடமையாகும்.



---

## 22. ஜீவஹிம்சை நிவாரண சங்கம்
## S. P. C. A.

மனிதருடைய சந்தோஷ வாழ்க்கைக்கும், அவர் குற்றங்குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்கும் பலவித சங்கங்கள் எல்லா இடங்களிலும் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன. அவ்விதமாகவே, வாயில்லாப் பிராணிகளுக்கு நேரிடும் தீங்குகளைத் தடுக்கவும், அவைகளின் நிலைமையைச் சீர்படுத்தவும் அனேக இடங்களில் ஜீவஹிம்சை நிவாரண சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சென்னைப் பட்டினத்தில் அந்தச் சங்கம் ஐம்பத்தைந்து வருஷங்களுக்கு முன் ஏற்படுத்தப்பட்டது. அச்

3118

சங்கத்தார், மாடுகளுக்கும், குதிரைகளுக்கும், நாய் களுக்கும் மற்ற பிராணிகளுக்கும் உண்டாகும் நோய்களைத் தீர்க்க ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தினார்கள். இப்பொழுது அந்த ஆஸ்பத்திரிகளைக் கவர்ன்மெண்டார் வெகு விமரிசையாய் நடத்திக் கொண்டு வருகிறார்கள். எல்லா ஜில்லாக்களிலும் அவ்விதமான ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன.

யௌவன பருவத்தில் உத்தியோகம் செய்து வயது முதிர்ந்த பிறகு, மனிதர்களுக்கு ராஜாங்கத்திலும், இன்னும் பல தொழிற்சாலைகளிலும் உபகாரச் சம்பளம் (Pension) கொடுக்கப்படுவது உங்களுக்குத் தெரிந்த விஷயமே. அவ்விதமாகவே, மாடு, குதிரை முதலிய பிராணிகள் தங்கள் யௌவன பிராயத்தில் வேலை செய்த பிறகு, கிழமாயும், துர்ப்பலமாயும் போனால் அவைகளைச் சொந்தக்காரர்கள் சரியாகக் காப்பாற்ற மாட்டார்களென்று மேற்சொன்ன ஜீவஹிம்சை நிவாரண சங்கத்தில், பிஞ்சரபோல் (Pinjrapole) என்னும் ஒரு பிரிவு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அதில் கிழமாயும், துர்ப்பலமாயும் இருக்கும் பிராணிகள் இறக்கும் வரையில் காப்பாற்றப் படுகின்றன.

எஸ். பி. ஸி. எ. என்று வழங்கும் அச்சங்கம் பிராணிகளின் சுக வாழ்க்கைக்காகப் பல வித முயற்சிகள் செய்து வருகின்றது. அச்சங்கத்தின் வேண்டுகோள் என்னவென்றால்:—

"வாயில்லாப் பிராணிகளை மறக்காதீர்கள். அவைகளை எப்பொழுதும் அன்பாக நடத்துங்கள். அவைகளை யாராவது கொடுமையாக நடத்தினால், அதைத் தடுக்க முயலுங்கள்."

மேலே படித்த பாடங்களினால் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியவைகள் என்ன? பிராணிகள் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டு, நமக்குப் பல விதமாய் உபயோகப்படுகின்றன. அவைகள் நம்மையே தெய்வமாக நினைக்கின்றன. நம்மையே நம்பியிருக்கும் அவைகளை நாம் கொடுமையாக நடத்தினால் அவைகளுக்கு வேறு யார் உதவிசெய்வார்கள்? அப்படி அவைகளைக் கொடுமையாக நடத்துவது, நமது குணத்திற்கே இழிவு அல்லவா! பிராணிகளிடத்தில் தயை, இரக்கம், அன்பு இல்லாதவன் மனிதரிடத்தில் எப்படி இருப்பான்? மேலும், சிறு பிராயத்திலிருந்து பழகி வரும் குணமே பிற்பாடும் வரும். ஆகையால், நீங்கள் செய்ய வேண்டியது என்னவென்றால், பிராணிகளுக்கு ஒரு விதமான தீங்கும் செய்யக் கூடாது; அப்படித் தீங்கு செய்பவர்களை நல்ல வழிக்குத் திருப்புங்கள். அப்படிச் செய்தால் நீங்கள் ஜீவகாருண்யம் மிகுந்தவர்களாகி மேன்மை அடைவதோடு, கடவுளுடைய கருணையையும் அடைந்து சௌக்கியமாயும், சந்தோஷமாயும் வாழ்வீர்கள்.